978
ஜெ
உ

# சிற்ப இரகசியம் முதற் பாகம்.



1948

KMM0248

ஆசிரியர்

ஸ்தபதி: T.P. கணேசமூர்த்தி திருப்பேரூர்

ஸ்ரீ சற்குருபாதந்துணை.

மனையடி சாஸ்திர மர்மமென்னும்

# சிற்ப இரகசியம்

முதற்பாகம்

இஃது திருப்போரூர் சிற்ப பரம்பரை தொழிலாளரும்
கலைஞருமான
தி. போ. பார்த்தசாரதி ஸ்தபதி அவர்கள் குமாரர்
பால சோதிடரும், ஆலயசிற்ப இன்ஜினீரிங்
கண்ட்ராக்டருமான

**ஸ்தபதி, தி. பா. கணேசமூர்த்தி அவர்களால்**

பலயேட்டு பிரதிகளைக் கொண்டு திரட்டி பஞ்சவிம்ச
பொருத்தங்கள் கணித்து இயற்றப்பெற்று
சென்னை பிரபல்ய சிற்ப சாஸ்த்திர கலாவல்லவரும்
தேவார போதகாசிரியருமான

**காஞ்சி. குப்புசாமி ஸ்தபதி அவர்களால்**

பார்வையிடப்பட்டது.

**1948**

விலை ரூபா] ரிஜிஸ்டர்டு [1—8—0

முதற் பதிப்பு.

978
ஆள/2

## உரிமை அறிவிப்பு.

சிற்ப இரகசியம் என்ற இன்னூலின் பதிப்புரிமை எங்களுடையதே. எவராவது இப்புத்தகத்திலுள்ள முகப்புப் படத்தையும் விஷயத் தலைப்புகளையும் அப்படியேயாவது அல்லது சிறுமாறுதலுடனாவது வெளியிடுதல் கூடாது. அத்துமீறி பதிப்பித்தால் அதனால் எங்களுக்கேற்படும் நஷ்ட ஈட்டைப்பெற உரிமை உண்டு என்பதை இவ்வறிப்பின் மூலம் எச்சரிக்கின்றோம்.

இப்படிக்கு
ஸ்தபதி T. P. கணேசமூர்த்தி
திருப்போரூர்
செங்கல்பட்டு ஜில்லா.

## சென்னை மராமத்து இலாக்கா மந்திரி
## கனம் பக்தவத்ஸலம் அவர்கள் மதிப்புரை.

பண்டைக் காலத்தில் நம் நாட்டில் எழும்பிய ஆலயங்களின் சிறப்பே நம் முன்னோர்கள் சிற்ப சாஸ்திரத்தில் எத்தகைய உன்னத நிலையடைந்திருந்தார்கள் என்பதைக் காட்டுகிறது. மகாபலிபுரம் அல்லது ஹம்பியிலுள்ள கட்டிடங்களோ சித்திரங்களோ அல்லது நம்பெரிய ஆலயக் கட்டடங்களோ கோபுரங்களோ அயல்நாட்டு சிற்ப நிபுணர்களை பிரமிக்க வைக்கின்றன. சிற்ப வளர்ச்சிக்கு இக்காலத்தில் நம் நாட்டில் போதிய வளர்ச்சி இல்லையென்றாலும் பண்டை சாஸ்திரத்தைப் பாதுகாத்து வரும் சிற்பிகள் இன்னும் நம் தமிழ் நாட்டில் இருந்து வருவது திருப்தியை யளிக்கக் கூடியது. இங்குமங்கும் நடைபெற்று வரும் சில ஆலய புனருத்தாரண வேலைகள் நம் காலத்திலுள்ள சிற்பிகளின் ஆற்றலை எடுத்துக் காட்டுகின்றன. இக்கலை நம் சிறந்த பொக்கிஷங்களிலொன்று. தற்கால சிற்பிகள் இதைப் பாதுகாத்து வருவது போற்றத் தக்கது. சிற்ப நிபுணர்களி லொருவர் ஸ்ரீ. டி. பி. கணேச முர்த்தி தம் வேலைப்பாட்டால் கலைத்தொண்டு செய்து வருவதுடன் சிற்ப இரகசியம் என்ற இந்நூலை வெளியிட முன்வந்ததை நான் வரவேற்கிறேன். கிரமப்படி கட்டடம் கட்டுவதற்கு வேண்டிய விஞ்ஞான அறிவைப் புகட்டக்கூடியது. இந்நூல் கணக்கு விவரங்களை யெல்லாம் அளிப்பதால் இது எல்லோருக்கும் மிகவும் உபயோககரமா யிருக்கும். கிணறு முழுகுவதில்கூட பண்டை சாஸ்திரம் நமக்கு விஞ்ஞான அறிவைப் புகட்டுகின்றது. நம் நாட்டில் இயற்கை தண்ணீர் வசதியை நாம் செப்பனிட வேண்டி யிருக்கிறது. அதில் போதிய அறிவும் அனுபவமு மின்றி பலர் அவதிப்படுகின்றனர். அவர்களுக்கு இந்நூலில் விளக்கப்படும் வழிகள் பயனளிக்கும் வெளியிடப்படும் இந்நூல் நம் கலை வளர்ச்சிக்குப்பெரும் உதவியாகவிளங்குமென்று நம்புகின்றேன். சாதாரண வீடு கட்டுவதில் கூட இப்புத்தகம் உதவி யளிக்கிறது. எனவே தமிழ் மக்கள் அனைவராலும் இது வரவேற்கப்படுமென்று எதிர்பார்க்கின்றேன்.

அடையாறு. } எம். பக்தவத்ஸலம். B.A., B.L., M.L.A.
28-5-48. } Hon'ble Minister for Public Works. Madras,

# சிற்ப இரகசிய மதிப்புரை.

---

சென்னை, சர்க்கார் கூட்டு சிற்ப-ஆலோசகர்

## திரு. நா. இ. ஜம்புலிங்க நாயகர் அவர்கள் மதிப்புரை.

நெடிய கடல் சூழ்ந்த பூவுலகில் மனிதராக பிறந்த அனைவருக்கும் வசிக்கும் இடமும் அருந்தும் நீரும் அத்யாவசியமானது. இவைகளின் அமைப்பு லட்சணங்களை பண்டைய சிற்பிகள் அனுபவித்துப் பலயேடுகளில் வரைந்து வைத்திருந்தனர். அப்படிப்பட்ட நூல்கள் தற்சமயம் பொது ஜனங்களுக்கு கிடைப்பதரிதாகி அனுபவமில்லாத சிலர் பல நூல்கள் இயற்றி வெளிவந்துள்ளதைப் பார்க்கும்போது அவை ஒன்றுக்கொன்று முரண்பாடாக தோன்றிப் பல சந்தேகங்களுக்கு இடந்தரும். இக்காலத்தில் சிற்ப சித்திர திருப்பணி கலைவல்லவர்களில் ஒருவரான திருப்போரூர் ஸ்தபதி ஸ்ரீ T. P. கணேசமூர்த்தி அவர்கள் அனுபவ பூர்வமாக தொகுத்திருக்கும் இந்த 'சிற்ப இரகசியம்' முதற் பாகம் என்னும் நூல் சகலரும் வரவேற்கதக்கதாகும். இதில் வீடு கட்டுபவர்களுக்கு வேண்டிய ஆயாதி விபரம், வாசக்கால் வைக்கும் லட்சணம், கிணறுகள் தோண்ட கருவிகளின் உதவியின்றி ஜலவசதிகள் கண்டுபிடிக்கும் வழிமுதலிய அம்சங்களுடன் மிக எளிய நடையில் பலருக்கும் விளங்கும் முறையில் தந்துதவியதை தமிழ்மக்கள் அனைவரும் பயன்படுத்திக் கொள்வது நலமாகும். இந்நூலை வாங்கி அதன்படி கட்டடங்கள் அமைத்து நன்மை அடைவார்களென்று நம்புகின்றேன்.

தங்கம்பாக்கம்.
30—5—48

N. E. ஜம்புலிங்க நாயகர்
A.I.I.A.F.R.S.A. (Lond)
Joint Consulting Architect, to Govt. of Madras.
P. W. D.

சென்னை. பிரபல ஆலய திருப்பணி கலைஞர்

## C. குப்புசாமி ஸ்தபதி

# சிற்ப இரகசிய மதிப்புரை

---

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

எனும் திருக்குறள்படி அறிஞர்கள் உணர்ந்து இந்நூலை ஆதரிப்பார்களாக.

திருமங்கலி யம்பதமும் ஸ்ரீம் ஐயும்
ஒலியுமெனும் சிற்பம் தெய்வ
உருவங்கள் க்ஷேத்திரமந் திரமாதி
உறையிடமும் உரைக்கு மீதை
தெரிவந்த முறையாலே அச்சிட்டான்
திருப்போரூர் கணேச மூர்த்தி
அருமந்த நூல்போன்று மற்றுளவும்
வெளிவருக அவனி யோங்க.

பாரதநன் னாடதனிற் பலபலவாம்
முனிவர்களாற் பகர்ந்த சிற்பம்
மாரதமும் கூபதடம் விமானாதி
மண்டபமும் மனையும் மற்றும்
சிருதுவுஞ் சிற்பகலை சிலவற்றைத்
திருப்போரூர் நிலவும் பார்த்த
சாரதிதன் மகன்கணேச மூர்த்தியவன்
தந்துலகில் தபதி யானான்.

சித்தத்தின் திறம்-சித்திரம், சிற்பம். சிறிய நட்சத்திரம் ஞான நட்சத்திரம் ஞானக்கண் என்பன பொருள். இது அலையா மனத்தில் கருத்துடன் கூடிய அறிவைக்கொண் டறிவதாகும். "வைத்தவொரு கல்வி மனப் பழக்கம்." என்பதில் வைத்து என்பது அறிவோடு விரவுதலாம்.

சிற்பமானது ரகசியமாக குருசிஷ்யமுறையில் உணர்ந்து சுருதியுக்தி அநுபவமூலமாகத் தேர்ந்து உலக உபகாரமாக இயங்கி பயின்றுவருவதாம். விஞ்ஞானம் சில்ப சாஸ்த்ரயோ: என்பதால் இதன் பெருமையை யாரால் கூற முடியும். தொன்றுதொட்டு சிற்பம் 32. என கூறப்பட்டுள்ளன. அவைகள் முறையே ஒருங்கு கூடி வெளிவர எவ்வளவு காலமாகுமோ என்பதறிகிலேன். நான் 18 வயது முதல் 26 வயது வரையில் சிற்பம் கற்சிபலரிடம் சென்று சென்று உழன்றேன். ஓலையேடு ஒன்று மட்டும் தந்து அஃதெழுதிக்கொண்டபின மற்றொன்று கொடுப்பார்கள். சிலதினம் நடந்தபின் ஒருதினம் ஓர் விஷயம் தான் வெளிவரும். இப்படி அலைந்து நான் சில அறிந்தபின் என் தந்தையை விரட்டியதுண்டு. அதன்பின் என் தந்தை என் உழைப்பை அறிந்து சிற்பக்கலை சம்பந்தமான பல விஷயங்கள் போதித்தார். அது முதல் அவரை குருவா யடுத்தேன். சிற்ப வித்தையானது பிதா மகனுக்குத் தெரியாமலும், மைந்தன் தந்தைக்குத் தெரியாமலும், ஆசான் சிஷ்யனுக்கு தெரியாமலும், சீடன் குருவிற்குத் தெரியாமலும் தாம் தாமறிந்த வித்தையை மறைத்து மறைத்து வைப்பதே வழக்கமாய் தொன்று தொட்டு நிகழ்ந்து வந்ததாகையால் இந்நூல் வெளியிட வந்த திரு. கணேச மூர்த்தியார் இதற்கு "சிற்ப இரகசியம்" என்னும் பெயர் வைத்துள்ளேன் எனருர். மிகவும் பொருத்தமானதென்றே உவந்தேன். இவர் தம் முன்னோர்களால் சேகாம் செய்து வைத்ததும் தான் பாடு பட்டுத் தேடியதுமான, இந்த சிற்ப இரகசிய நூலை சிற்பத்தொழிலாளர்களும்மற்றவர்களும் எளிதில் பயன்படுத்திக் கொள்ள அச்சிட்டு வழங்கின ரிதலால், இவருக்கு எற்பட்ட ஊக்கம் இன்னும் அதிகரித்து இது சம்பந்தமான நூற்கள் இன்னும் பல தேர்ந்தும், சேகரித்தும், அச்சிட்டு உலக உபகாரமாக வழங்க எல்லாம் வல்ல இறைவன் திருவருள்கூட திடகாத்திரமும் தீர்க்காயுளும், குறையா ஆக்கமும், ஊக்கமும் உண்டாகுமாறு ஸ்ரீசண்முகப் பெருமான் திருவருளை என் மனமாரப் பிரார்த்திக்கின்றனன்.

26-4-48. காஞ்சி. குப்புசாமி ஸ்தபதி.

# முகவுரை.

---

நெடிய கடல்சூழ்ந்த நிலவுலகின்கண் ஈஸ்வர சிருஷ்டியால் உண்டாக்கிய வஸ்துக்களைக் கொண்டு மானுஷ்ய சிருஷ்டியாக ஆக்கப்பட்டுவருவது கிராமம், நகரம், பட்டணம், கோவில், மடம், தடாகம், கூபம், மனை, மாளிகை அரண்மனை, மண்டபம், கோபுரம் முதலியனவாகும். இவைகள் நிர்மிக்கும் காலத்தில் லட்க்ஷியப்பட்ட உருவ வஸ்துக்களுக்கு லட்சணம் குறிக்கவந்ததை சிற்பம் என்று சொல்லப்படுவதுஇதைஒவ்வொருவரும் தன்னிஷ்டப்படிசெய்து கொள்ள முடியாது ஆனல் ஷெ லக்ஷணம் அறிந்தவர்களைக்கொண்டு செய்வோனுடைய காலதேச வர்த்தமானங்களை அறிந்து பொருத்த முணர்ந்து செய்வதற்கு அனுகூலமாக முன்னோர்கள் வரைந்து வைத்துள்ள சுருதிகளை சிற்பநூல் எனப்படும்.

"இடம்பட வீடிடேல்"

என்றபடி இந்த முறைமையை தொன்று தொட்டு அனுஷ்டித்து வந்ததில் தர்க்காலம் அவைகளை அநேகர் கைசோரவிட்டு தங்களிஷ்டம்போல் செய்து பிற்காலத்தில் துன்பம் அடைகிறார்கள். அதற்கு காரணம் போதிய சிற்பநூல்கள் தற்காலத்துக்கு தகுந்தமுறையில் இல்லாமல் சந்தேகங்களை விருத்தி செய்து விட்டதாலும் தெரிந்துள்ள சிலரும், பலருக்கும் பயன்படும்படி போதிக்காததாலும் இக்கஷ்டத்துக்கு ஆளாகிறது இக்குறைகளை அறிந்த பலதொழிலாளிகளும் அநேக பிரமுகர்களும் கேட்டுக்கொண்டபடி எனது பிரதம சோதிட ஆசிரியர் ஸ்ரீமத் சின்னப்பா பிள்ளை அவர்கள் இட்ட கட்டளைப்படி என் தந்தையும் எனது சிற்ப தொழிலாசிரியருமான T. P. பார்த்தசாரதி ஸ்தபதியார் அவர்கள் தந்துதவிய பழய ஓலை

யேட்டு பிரதியைக்கொண்டு சுருக்கமான முறையில் விளக்கி என் சிற்றறிவுக்கெட்டியவாறு இயற்றியதை சென்னை பிரபல்ய சிற்ப சாஸ்திர கலாவல்லவரும் தேவார போதகாசிரியருமான ஸ்தபதி காஞ்சி. குப்புசாமி ஆச்சாரியார் அவர்கள் தன் சிரமம்பாராமல் இந்நூலை பார்வையிட்டுதவியதற்குஎமது மனமார்ந்த நன்றி செலுத்தி ஒவ்வொருவரும் இந்நூலை படித்து இதிலுள்ள குற்றங்களை நீக்கி குணங்களைக் கொண்டு இதன்படி மேலே குறிப்பிட்டவைகளை அமைத்து நன்மையடைய எல்லாம்வல்ல இறைவனை பிரார்த்திக்கின்றேன்

இப்படிக்கு

**ஸ்தபதி T. P. கணேசமூர்த்தி**

சிற்ப திருப்பணி தொழிலாளர்

சபாபதி பத்தர் தெருவு திருப்போரூர் P, O

செங்கல்பட்டு (Dt.)

---

உ

பரமபதி துணை.

# சிற்ப இரகசியம் (முதல் பாகம்.)

—※—

## கணபதி துதி.

மனிதனை யளந்து வீடு மகிழ்ச்சியா யியற்றி வாழ
முனிமயன் சொன்ன நூலை மொழிகளாற் பாவச் செய்ய
எனையுளர் தூண்டு முக்கண் ணெம்பிரான் கணேசன் பாதம்
நினைவிலுங் கனவி லும்மென் னெஞ்சகம் மறக்கி லேனே.

## குரு வணக்கம்.

சீர்நிறையும் வாவிவளர் திருப்போரூர்
நன்னகரில் நிலைமை யுற்றோன்
பேர்நிறையுந் திருமாலன் பன்கருணி
கர்குலத்துப் பிறந்த சீலன்
பார்நிறையுந் தமிழ்நூற்க ளுபர்வாய்ந்து
சோதிடநூற் பலவுங் கற்றோன்
ஏர்நிறையும் எனதுகுரு சின்னப்பா
இணையடியென் சென்னி யாமே.

## அவையடக்கம்.

மழலைச் சிறுமி மரப்பாவை கட்டுங்
கழகுமணஞ் செய்வ ததுபோலென் — பிழைபொறுத்துச்
சிற்பகலை யோர்ந்த சிரோமணிகள் சீர்கொண்டு
அற்பகுறை நோக்கா ரறிந்து.

## இந்நூல் எழுதிய காரணம்.

மறையவர் மன்னரோடு வணிகர் வேளாண்மை யாளர்
குறைவற நெறியின் வாழக் கூறிய அளவு நூலை
நிறைவுள எத்தேசத்தும் எந்தெந்த சாதியார்க்கும்
முறையெனப்பொதுநோக்காகமொழிந்தனன்தமிழின்மாதோ

## இந்நூலுக்கு அருகரல்லாதவர்.

மாறுகண்ணன் மணமிலாதோன் மனைவியற்றோன்வஞ்சமாய்த்
தூறுசொல்லி குடிகெடுப்போன் சுந்தரமி லாதவன்
சீறுகோபி யானவன்நற் சிந்தையற்ற எத்தனும்
கூறுமிந்த சாத்திரத்திற் கூடொணாத பேர்களாம்.

## சிற்பன் இலக்கணம்.

சுத்தமன வாக்காதித்தூயோ னாகிச்
சுருதியுத்தி யனுபவத்திற் றேய்ந்தோ னாகி
சித்தமது தெளிந்தோனாய்ச் செகத்து ளார்க்குச்
சிருஷிக்க வேண்டுமெனுஞ் சிந்தை யோனாய்
நித்தநெறி யனுட்டான நிலைமை மாறா
நேயமிகு நற்குணமே நிறைந்து தெய்வ
பத்திதனி லீடுபட்டுப் பலநூ லாய்ந்த
பண்டிதனே சிற்பனெனப் பகர லாமே.

## சிற்பமுறை தவறினால் நேரிடும் பயன்.

ஆலயம் நகரம் கிராமம் அரண்மனை தடாகம் கூபம்
கோலமா ளிகைம டங்கள் கோபுரம் மனைகள் கூடம்
சீலமாஞ் சிற்ப னன்றி அன்னியர் செய்யில் மன்னர்
நிலைப் பொருண் டாக்கும் கர்த்தர்க்குங் கெடுதி யாமே.

## சிற்பனுக்கு செய்யும் நட்பு.

நல்லதோர் சிற்பனுக்கு நட்பொடு மனைகோலுங்கால்
சொல்லுமூர் நிலமும் பொன்னும் சுமங்கலப் பொருளுமீந்து
வல்லவை வரைந்து கேட்டு வளம்பெற முடிவில் கொண்டால்
செல்வமாம் ஈசன் சொன்ன சிற்பநூல் பலிக்குந் தானே.

## சிற்பனுடன் முரண்படக்கூடாது என்பது

செயற்கருஞ் செய்கை செய்வார் செகமிசைப் பெரியரென்னும்
முயற்சியோன் சிற்பன் றன்னை முரண்பட முனிவு கொள்வார்

அயர்ப்புறு மனந்த துன்பம் அடைகுவர்; மறுமை யிம்மைக்
கயற்கை யாசிரியனை இதம்புரி அறிஞர் வாழ்வார்

## கிரகாரம்ப மாதபலன்.

கார்த்திகை தைமா சிக்கும் கனமுறும் வைகா சிக்கும்
சீர்த்திக ழாவணிக்குஞ் செய்யலாம் கிரகா ரம்பம்;
பார்த்திபர் கர்த்தர்க் காகா பங்குனி சித்தி ரைக்கும்
ஆர்த்திடு மற்றமாதம் அனைவர்க்கு மாக தன்றே.

## கிரகாரம்ப வாரபலன்.

சோமபுத வாரகுரு சுக்கிரநாள் மனையை
பூமகனு மகளுறவாய் புவிமனன் தனி னருளால்
சேமமொடு கோலிடநன் னிதிவளமாய் வாழ்வார்
தீமைதரும் ஆதிசனி செய்தினமா காதே.

## கிரகாரம்ப திதிபலன்.

சஷ்டியும் ப்ரதமை யோடு சதுர்த்தசி சதுர்த்தி பர்வம்
அஷ்டமி நவமி யோடு அமாவாசை யதுமுன் னேழ்நாள்
கஷ்டமே யளிக்கு மற்ற நாட்களே நன்மை யாகும
இஷ்டமாய் மனை கோல்வார்க்கு வளர்பிறை யிதனுள்மேலாம்

## கிரகாரம்ப நட்சத்திரபலன்.

அத்தம் சுவாதி யஸ்வனி யனுடம் அதிமேன்மை யாம்
கர்த்தன் செயம் பெறும் ரோகணி பூசம் *கடையுற்ற நாள்
உத்திரட் டாதி சுதயமோ டோணம் உலகி னற்குப்
பத்தும் பொருந்தும் மனைகோலத் தாரா பலனி ருந்தால்.

*ரேவதி

## கிரகாரம்ப இராசிபலன்.

கடகதுலா மேடம் கனமகரங் கடகாலிட்
டிடபவிருச் சிகசிங்க மிதனேடு—குடராசி

கால்நிறுத்தி வீடுகட்டி கன்னிதனுர் மீன்மிதுனம்
சால்புடைத்துக் குடிபுகுதத் தான்.

## மனைகோலக் கூடாத நாட்கள்.

காலற்றன வுடலற்றன தலையற்றன நாளில்
கோலக்குழ மடவார்தமைக் கூடின்மல டாவார்
மாலுற்றொரு மனைமாளிகை கோலின்னது பாழாம்
ஞாலத்தவர் வழிபோனினு நலமற்றிடர் வருமே.

காலற்றநாள்: கார்த்திகை, உத்திரம், உத்திராடம், உடலற்றநாள்: மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம், தலையற்றநாள் புனர்பூசம், விசாகம், பூரட்டாதி.

ஆரல் மந்தாரங் கிரகணமாதம் துலக்க மில்லா
ஈமா வாசை வருமல மாதம் இரட்டித் தமீன்
சேருமந் நாளுங் குருசுக்ர மூடந் தியாச்சி யமும்
யாருமிக் காலம் மனைக்கோல லாகா தெம கண்டமே.

. எமகண்டமே என்றதால் இராகு காலமும், எமகண்டமும், இவற்றோடு கொள்க.

## கிரகாரம்ப ராசியில் கிரகம் நின்றபலன்.

மதியிருக்கக் கால்தொடங்கி மாலிருக்கக் கட்டி
விதிவெள்ளி தானிருக்க மேல்மூடி—பதியதனில்
மந்திரியுந் தானிருக்க மாடங் குடிபுகுந்தார்
இந்திரன்போல் வாழ்வார் இசைந்து.

மதி-சந்திரன் மால்-புதன் மந்திரி-குரு கால்தொடங்கி-கடகாலிட்டு

## கிரகாரம்பகாலத்தில் இராசியில் கிரகநிலையின் தீமை.

கற்கடத் தவன்றன் னோடுங் கனமுறு மிலக்கி னத்தும்
விற்பன வதிபனோடும் பாவிகள் விரவி நிற்க

சொற்பனி ரெண்டு மெட்டும் சுத்தமு மின்றிச் செய்யில்
சிற்பனும் கர்த்தன் றானும் சீக்கிரம் கெடுவர் தாமே.

## மனை கோலக்கூடாத இடம்.

கோவி லெதிரிடமுங் கோபுரநீ ழற்றலமும்
நாவுந் தெருவெதிருஞ் சந்திரத்தும்—மேவுபல
குத்துவர எதிர்மனைவாய் குற்றமுற வீடுகட்டத்
தத்துமிகத் துன்பந் தரும்.

## மனை அருகில் கூடாத மரங்கள்.

பருத்தி யகத்தி பனையெட்டி நாவல்
எருக்கு புளிகள்ளி இவ்வேர்—விருத்திபெற
எந்தமனை யாயிடினும் இந்த்ரபத மொத்திடினும்
அந்தமனை பாழாய் விடும்.

## ஈசான்யத்தில் கிரகாரம்ப பலன்

ஈசனார் திசையிற்றானே யெழிலுறு மனையெ டுக்கில்
போசனம் பண்டம் ஆடை பொருள்சுகம் பெண்டு மக்கள்
கேசவன் றன்னைப் போல கிளைவழி பலமே லோர்க்கும்
நேசமா யுலகில் வாழ்வார் நிதந்திரு கடாட்சந் தானே.

## கிரகாரம்பம் செய்யும் விதம்.

தாழ்விலர் சதுரந்தன்னில் சதுக்கமாய் இருமு ழத்தில்
ஆழமும் அகலங் கெல்லி யதனுள்ளே பூவும் விட்டால்
வாழ்கதி ரோனை நோக்கி வலம்புரிந் தோடில் வாழ்வாம்
சூழ்கதி யிடமாய்ச் சுற்றில் தொல்லையே யாகு மன்றே.

## தேங்காய் உடை சகுனங்கள்.

வாங்கிய தேங்காய் தன்னை மகிழ்வொடு சிற்பன் றானும்
தாங்கியே யுடைக்கும் போது தவறியே விழுமே யாகில்
பூங்கொடி மறிப்பாள் செல்வப் பூமகள் தானும் இல்லாள்
பாங்கொடு மயனார் கண்ட பண்டமு போகமாமே.

உற்றிடு முகூர்த்தத் தேங்கா யுடைபடும் பலனைக் கேளீர்
மற்றது தெறிக்கச் சாவாம் வளர்ந்து பெண்முடி பெருக்கில்
கற்றறி புதல்வ ருண்டாம் கண்விடில் வாழ்வுகுன்றும்
சுற்றமில் அழுகல் ஆகில் தான்செயுங் கருமந் தீதாம்.

ஆணிமுடி தானிரண்டு கூறதானால்
அக்கினியால் பொருளுக்குச் சேதமாகும்
பேணியதில் ஓடுடனே தெறித்து வீழ்ந்தால்
பிணியாலே வாதையுண்டு பெரிதுந் துன்பம்
நீணியதோர் கண்தெறித்தால் மரணமாகும்
நீளமதாய்ப் பிளவுபட்டால் நிதியுஞ்சேதம்
தாணுவிலே தவறிவிடில் குடும்பநாசம்
தந்திமுகன் முன்தேங்காய்ச் சகுனந்தானே.

## அளவு கோல்.

தாலம்வி தஸ்தியஸ் தந்தண்ட மேமுறை சாண்முழக்கை
கோலென் றளவுகோல் கொள்வதிந் நான்கு செங்கோலரசர்
எழுங்கை சாணேல் எஜமானர் சாணேல் இரட்டிரட்டித்
தாலந்த தாலம்வி தஸ்தியஸ்தந் தண்டந் தருமளவே.

தாலம்-ஜாண், விதஸ்தி-முழம், அஸ்தம்-கை, தண்டம்-கோல், இரட்டிப்பதாவது-2 ஜாண்கொண்டது - 1 முழம். 2 முழம் கொண்டது-1 அஸ்தம். 2அஸ்தம்-1 தண்டம்.

## அளவுகோலின் அங்குல வகை.

ஒன்பது மாத்ராங் குலமொரு சாணுய் யுயருமானம்
என்பது மேழங் குலமாயிச் சாணில் இதனிலாறுத்
தென்படு மங்குலந் தேவாங் குலமாய்த் தெரியவைத்தார்
அன்பொடு கோணுந் தலமுமா தாரம் அறிந்தவரே.

ஒரு சாணில், மாத்ராங்குலம் 9ம், மானுங்குலம் 7ம் தேவாங்குலம் 6ம் உளதாகக் கொள்க.

## அளவுகோல் வகையும், செய்கையும்.

தேவாங் குலக்கோலில் ஆலயம் வுருவம் தேர்ந்து செய்து
மூவா மடந்தடம் மானுங்கு லத்து முடிவு கொண்டு
மாவா ழிடம்போல மாத்திரைக் கோலால் மனைவகுத்தால்
கோவாழத் தன்வளங் குடிவாழு மென்றுங் கூறினரால்.

மானுங்குலத்து என்பது மானுங்குலக்கோல் எனக் [கொள்க.

நால்வித அளவில் மூவகைத் தானம் நலம்பெறவே
கோல்முறை கொண்டதன் சுற்றளவிற்குக் கொளும் பொருத்
சால்புடைத் தநிகம தாகவா யாகிற் தான்செய்துபின் [தம்
நால்வலித் தேமுளை யிட்டுநாட் கொள்வது நாற்கருத்தே.

நால்வித அளவு: ஜாண், முழம். அஸ்தம், தண்டம். மூவகை தானம்: ஆலயாதி, மடதடாதி, மனையாதி.

சாண்முழம் அஸ்தமும் தண்டத்தும் ஆயம் சரிவராதேல்
நீண்மனை யாலயம் சத்திரம் முன்னே நிகழ்ந்தச் சொன்ன
நான்முறை யங்குலத் தால்தக்க வாறவை நண்ணிச் செய்தா
சான்முளை சந்ததி மேலோங்க சிற்பநூல் காக்குமன்றே. [ல்

ஆதியிடை மயனறிந்து அனுபவித்த அளவிதனை
ஆகமத்து மேன்மையுறு சிற்பமதும் அறிவுறுத்த
சூதுடையோர் பலஅளவு சூழ்ச்சியொடு மறைமொழியால்
சொல்லியதால் துரைத்தனத்தார் சோர்ந்திவற்றை விடுவித்து
நீதிதரு மாத்திரைக்கோல் அங்குலத்தை நிகர்த்ததொரு
நிகழ்வில்லா அடிக்கோலை நிறுவவைத்தார் அதுகொண்டு
சோதியுள ஆலயங்கள் செப்பனிடல் தகுதியல
சூழுமனை யாதிசெயில் சொற்பபலன் தருமன்றே.

### சிதம்பரக்கோல் என்பது.

அடியளவின் அங்குலத்தில் முப்பத்தி நான்குக்
கானவங்கு லந்தனையே சோமனஸ்த மென்று

படியறிய அங்காளில் பழமை சிதம் பரத்தில்
பதித்துள்ளார் திருவாயில் படிநுழையு மிடத்து
முடிவுபெறும் அளவாய் சிற்பமுறை யறிந்தோர்
முதன்மையுறு மாலயங்கள் முயன்றுசெய்து வருவார்
இடையில்பலர் இதறியா திடர்ப்படுவார் இதனில்
இலங்கிடுதே வாங்குலமும் இருபத்தி நான்கே.

## மனை அகலம், கூடம் இவைகள் வைக்கவேண்டிய,

## அடிகளின் பலன்.

6-அடி நன்மை
7-அடி மத்திமம்
8-அடி இராஜ்யம் பண்ணும்
9-அடி பீடை
10-அடி பால் சாதம் உண்டு
11-அடி (நன்மை) புத்திர சம்பத்து
12-அடி புத்திர ஹானி
13-அடி வியாதியுண்டு
14-அடி சஞ்சல முண்டு
15-அடி உடனே துன்பம்
16-அடி மிகுந்த செல்வமுண்டு
17-அடி எதிரியும் அஞ்சி நிற்பன்
18-அடி அமர்ந்தமனை பாழாம்
19-அடி தரித்திரம் புத்திர வியாதி
20-அடி இன்பம் தரும்
21-அடி நன்மைதரும் (சிலர் இருப்பு குலைந்து போகும்
[என்பாரு முளர்
22-அடி எதிரி யஞ்சுவான்
23-அடி தீது உண்டாம்
24-அடி மனையாள் சாவான்

25-அடி திருவாழ்வுண்டாகும்
26-அடி சம்பத்துண்டாகும்
27-அடி தெய்வகடாட்ச முண்டு
28-அடி மிகுந்தசெல்வ முண்டாகும்
29-அடி பால்பாக்கிய முண்டாம்
30-அடி லக்ஷ்மி கடாட்சம் (நோய்)
31-அடி மனையாள் சாவு (நன்மை)
32-அடி பழய பொருள் வரும்
33-அடி பதியிரண்டுண்டாம் (நன்மை)
34-அடி குடி விட்டோடும்
35-அடி லக்ஷ்மி கடாட்சமுண்டு
36-அடி சுகமுண்டாம்
37-அடி கன்றுகாலி விருத்திஉண்டு
38-அடி பிரம ராக்ஷஸம் குடிபுகும்
39-அடி நன்மையுண்டாம்
40-அடி எதிரிகளால் எந்நேரமும் தீது
41-அடி குபேர சம்பத்துண்டு
42-அடி லக்ஷ்மி வாசம்
43-அடி நன்மை கொடாது
44-அடி கண் போம்
45-அடி சற்புத்திரர் உண்டு
46-அடி வீடு விட்டோட்டும்
47-அடி எந்நாளும் வறுமையுண்டு
48-அடி வீடு தீப்படும்
49-அடி மூதேவி வாசம்
50-அடி ஆவுபாற் பாக்கியங்கள் அதிக விர்த்தியாயிருக்கும்.

## திசைக்குறித்த மனைப்பெயர்.

கிழக்கு கெருடசாரி மனை
தெற்கு சிம்மசாரி மனை
மேற்கு சர்ப்பசாரி மனை
வடக்கு கெஜசாரி மனை ஆதலால்

கெருட மனையில் சர்ப்ப சாரி கெற்பமும் யோனியும் பகையானதால் கூடாவாம்.

சிம்ம மனையில் கெஜசாரி கெற்பமும் யோனியும் பகையானதால் கூடாவாம்

சர்ப்ப மனையில் கெருடசாரி கெற்பமும் யோனியும் பகையானதால் கூடாவாம்

கெஜசாரி மனையில் சிம்மசாரி கெற்பமும் யோனியும் பகையானதால் கூடாவாம்.

### இதை அறிந்து ஆயம் பார்க்கவேண்டும்.

நகரம், கோவில், வீடு, தடாகம், கூபம்; முதலியவை நிர்மிக்கு மிடத்து, முகூர்த்தம் செய்த மனையை நாற்புறமும் ஒற்றுமைப்படஅளந்து அகலநீளமாகிய இருபக்கத்தின் அளவையும் பெருக்கி கண்ட தொகையை ஆயம், குழி எனவும், நாற்புறச்சுற்றளவை துருவம், பரிணாகம் எனவும் படும்.

கிழக்கு மேற்கு ஓரளவாகவும், தெற்கு வடக்கு ஓரளவாகவும், இருக்கவேண்டும் அஃது இல்லாதது குழிமுறிய லெனப்படும்

### 1 கெற்பப் பலன்.

ஆயத்தை 8ல் வருக்க வரு மிச்சம். கெற்பம. மிச்சம் வாமல் போனல் 8லையே வைத்துக் கொள்ள வேண்டியது நீதி.

1 வது, கெருடகெற்பம் திசை கிழக்கு தெய்வம் இந்திரன், மிகுந்த சுபம், நான்குவகை ஜாதியர்களுக்கும் பொருத்தமாய் இருக்கும்.

2 வது புரு கெற்பம், திசை தென்கிழக்கு தெய்வம். அக்கினி மத்திபம், வறுமையும், தனநஷ்டமும், அக்கினிபயமுமுண்டாகும்.

3 வது சிம்ம கெற்பம், திசை தெற்கு, தெய்வம், எமன் மிகுந்த ஜெயமுண்டாம், இஃது வேடர்களுக்காகும் என்பாரும் முளர்,

4 வது, ஸ்வானகெற்பம், திசை தென்மேற்கு, தெய்வம் நிருதி, வறுமை மத்திபம் இஃது குறவர்களுக்காகும் என்பாருமுளர்.

5 வது, சர்ப்ப கெற்பம், திசைமேற்கு, தெய்வம் வருணன் தனவானுய் சுகத்துடன் வாழ்வார் அரக சகலகாரியங்களும் ஜெயமாகும்.

6 வது, காக்கை கெற்பம். திசைவடமேற்கு தெய்வம் வாயு வறுமை இது நீச்சர்களுக்காகும் என்பாருமுளர்.

7 வது, கெஜகெற்பம், திசைவடக்கு தெய்வம் குபேரன் குபேரசம்பத்துண்டாகும்.

8 வது, கழுதை கெற்பம் திசைவடகிழக்கு தெய்வம், ஈசானியன். எவர்களுக்கும் ஆகாது வறுமை, மனையும் சீக்கிரத்தில் முடியாது.

## 2 ஆதாய பலன்.

ஆயத்தை 8ல் பெருக்கி 12ல் வகுக்க வருமிச்சம் ஆதாயம்.

ஆதாயம் 1க்கு சுபம் விசேஷபலன்
,, 2க்கு தனபாக்கியமுண்டாம்
,, 3க்கு பாக்கிய விர்த்தி சௌக்கியமுண்டு

,, 4க்கு கீர்த்திசகல சௌக்கிய முண்டாம்

,, 5க்கு புத்திரர் அற்பம் மத்திமம்

,, 6க்கு வசியம், மத்திமம்.

,, 7க்கு சுகம், ஞானம் உண்டாகும்.

,, 8க்கு ஞானம், சுபம், சந்தோஷ முண்டாம்.

,, 9க்கு தானியம், மிகுந்த யோகமுண்டு.

,, 10க்கு செல்வம், சுபம் உண்டாகும்.

,, 11க்கு வீரியம், தருமசிந்தையும் உண்டு.

,, 12க்கு சம்பத்து உத்தமம்.

### 3 விரைய பலன்.

ஆயத்தை 9ல் பெருக்கி 10ல் வகுக்க வருமிச்சம் விரையம் விரையம் 1க்கு வறுமை, சகலமும் குன்றிப் போகும்.

,, 2க்கு தீது, விடுதிப்படும், பயமுண்டாம்.

,, 3க்கு செல்வம், மிகுந்தசுப முண்டாம்.

,, 4க்கு யோகம் மத்திமம்.

,, 5க்கு செலவு, மிகுந்தசுபம் வீண்செலவு.

,, 6க்கு சுபம் மத்திமம் என்பாருமுளர்.

,, 7க்கு செலவு மிகுந்த சுபகரம்.

,, 8க்கு தனலக்ஷிமிவாசம், பிணிமுதலாகியது உண்டு

,, 9க்கு நாசம், மத்திமம்.

,, 10க்கு சம்பத்து, மரணபயம் உண்டாகும்,

### 4 யோனிப் பலன்.

ஆயத்தை 3ல் பெருக்கி 8ல் வகுக்க வருமிச்சம் யோனி.

1 வது கிழக்கு கெருடயோனி (அல்லது) துஜயோனி மனைவி மக்களால் குடும்ப விர்த்தியும் பாக்கிய முமுண்டாம்.

2 வது தென்கிழக்கு பூனையோனி மிகுந்தவறுமையும் கவலையாகூலம் முதலியவை உண்டாகும்.

3 வது தெற்கு சிம்மயோனி தனயோக போகபாக்கியங்கள் உண்டாகும்.

4 வது தென்மேற்கு சுவானயோனி (அல்லது) நாய் யோனி பிணி கலக முதலியவை உண்டாகும்.

5 வது மேற்கு சர்ப்பயோனி லக்ஷ்மி கடாட்சம் தன பூ லாபம் முதலியவை உண்டாகும்.

6 வது வடமேற்கு எலியோனி (அல்லது) காக்கை யோனி, குடும்ப கலகமும், பொருள் நஷ்டமும், தரித்திரமும் உண்டாகும்.

7 வது வடக்கு கெஜயோனி கீர்த்தி ஞானம்யோகம் பாக்கிய முண்டாம்.

8 வது வடகிழக்கு காகயோனி (அல்லது) கழுதை யோனி (அல்லது) முயல் யோனி தரித்திரம் ஜாதி பிரஷ்டத்துவம், பிணியுண்டாம்:

## 5 வாரப் பலன்.

ஆயத்தை 9ல் பெருக்கி 7ல் வகுக்க வரு மிச்சம் வாரம்.

1 வது ஆதிவாரம் குரோதமுண்டாம். மத்திமம் ஆனாலும் பிதுராஜித சொத்தை விருத்தி செய்யும் என்பாருமுளர்.

2 வது சோமவாரம் நாளுக்கு நாள் மிகுந்த நலமுண்டாகும்.

3 வது மங்களவாரம் தனநஷ்டமும் துக்கமுமுண்டாகும்.

4 வது புதவாரம் மிகுந்த லக்ஷ்மிகரமுண்டாகும்.

5 வது குருவாரம் புத்திரபாக்கியம் தன சம்பத்துண்டாம்.

6 வது சுக்கிரவாரம் சகல காரிய நலமுண்டு.

7 வது சனிவாரம் சோரபயம் துக்கமுண்டாகும்.

351

## 6 திதி பலன்.

ஆயத்தை 4ல் பெருக்கி 30ல் வகுக்க வருமிச்சம் திதி வாஸ்து புருஷன் வலக்கரமாகிய பூர்வபக்ஷம் உத்தமம். இடக்கரமாகிய அமர பக்ஷம் மத்திமம் ஆனால் இவ்விரண்டு பக்ஷங்களிலும்,

1 வது பிரதமை உத்தமத்தில் மத்மபலன் (அதாவது) சௌக்கியத்தில் கவலை தரும் என்பதாம்.

2 வது துதியை இன்பமுண்டு.

3 வது திருதியை ஜெயமுண்டாகும்.

4 வது சதுர்த்தி மத்திமபலன் அதிக துன்பமுண்டு.

5 வது பஞ்சமி நன்மை புத்திர சம்பத்துண்டாகும்.

6 வது சஷ்டி மத்திமம்.

7 வது சப்தமி யோக பாக்கியமும் சுகமுமுண்டாகும்

8 வது அஷ்டமி அதிக துன்பமும் கவலை தரும். ஆனால் பூர்வபட்சமாயின் சுபபலனைத் தரும் என்பாருமுளர்.

9 வது நவமி மனையில் நிலையில்லாமல் அதிக துன்பம் தரும்

10 வது தசமி பாக்கியமும் நன்மையுமுண்டாகும்

11 வது ஏகாதசி சிறுமை மத்திமம்.

12 வது துவாதசி செல்வம் கல்வி முதலாகியவுமுண்டாகும்.

13 வது திரியோதசி கல்வி முதலாகிய சம்பத்துண்டு.

14 வது சதுர்த்தசி மனைபாழாம் துன்பமுண்டாகும்.

15 வது பூரணை எல்லாம் உத்தமமாயிருக்கும் (அல்லது) அமாவாசை அதிகதுன்பமும் கவலையுந்தரும்.

## 7 நட்சத்திரப் பலன்.

ஆயத்தை 8ல் பெருக்கி 27ல் வகுக்க வருமிச்சம் நட்சத்திரம்.

1 வது அசுவனி, எல்லாம்வசியமாகும் வெற்றியுண்டாம்

2 வது பரணி, கிரகம் பூரத்தியாகாமுன் தலைவன் மறிப்பன் பேய் பூதம் வசிக்கும் வறுமையுண்டாகும்.

3-வது கிருத்திகை, வீட்டுக்கு அக்கினிபயம் வறுமையுண்டாம்.

4-வது ரோகணி, ஜெயம் உண்டாம் உத்தமம்.

5-வது மிருகசீரிஷம், மிகுந்தஜெயமுண்டாம்.

6-வது திருவாதிரை, சௌக்கியப்பலன் இருந்தாலுமத்திமம்.

7-வது புனர்பூசம், புத்திரபாக்கியம் செல்வமுண்டாகும்.

8-வது பூசம், சந்ததி, சௌக்கிய விருத்தியுண்டாகும்.

9-வது ஆயிலியம் }
10-வது மகம் }
11-வது பூரம் } சௌக்கிய குறைவும் மரணாவஸ்தையும் பேய் பூதம் வாசமும் பெருஞ்சத்ருமும் நீங்கும்.

12-வது உத்திரம் }
13-வது அஸ்தம் } நாலுக்குநாள் மிகுந்த நலமுண்டாகும்.

14-வது சித்திரை, பிணிமுதலியவை யுண்டாகும்.

15-வது சுவாதி, மிகுந்தசுகமுண்டு ஆனாலும் அதிகசிரமம்.

16-வது விசாகம், துன்பமாகிய சஷ்டாஷ்டகம் உண்டாகும்.

17-வது அனுஷம், சகலசௌக்கியமும் கல்வியுமுண்டாகும்.

18-வது கேட்டை, }
19-வது மூலம், }
20-வது பூராடம், } பகைபிணி குடும்ப விரோதம் இல்லம் பாழாம், பேய்பூதம்வாசம்செய்யும், ஆகிலும் மூலம் உத்தமம் என்பாருமுளர்.

21-வது உத்திராடம், சுபகரமுண்டாகும்.

22-வது திருவோணம், சௌக்கிய முண்டாகும்.

23-வது அவிட்டம், சுபபலனைப் நடக்கும்.

24-வது சதயம், லக்ஷ்மி வாசமுண்டாகும்.

25-வது பூரட்டாதி, செல்லம் சுத்தம் நீங்கும்.

26-வது உத்திரட்டாதி, யோகபாக்கியங்களும்மிகுந்த சுபகரமுமுண்டாகும்.

27-வது ரேவதி, வசிப்பவர்களுக்கு எந்நாளும் பிணி.

## 8 புருஷ இராசிப்பலன்.

ஆயத்தை 7ல் பெருக்கி 12ல் வகுக்க வருமிச்சம் புருஷ இராசியாம்.

2 ரிஷபம்
5 சிம்மம்
8 விருச்சிகம்
11 கும்பம்
} இந்நான்கும் ஸ்திர இராசிகள் துன்பம் தரும் மத்திமபலனும் நடக்கும்.

3 மிதுனம்
6 கன்னி
9 தனுசு
12 மீனம்
} இந்நான்கும் உபயஇராசிகள் உத்தம பலனும் நடக்கும்.

1 மேஷம்
4 கடகம்
7 துலாம்
10 மகரம்
} இந்நான்கும் சரஇராசிகள் உத்தம பலனும் நடக்கும்.

## ஸ்திரீ இராசிப்பலன்.

ஆயத்தை 4ல் பெருக்கி 12ல் வகுக்க வருமிச்சம் ஸ்திரீ இராசியாம்.

1-வது மேஷம் குடும்ப விருத்தியானாலும் பலபிணியுண்டு.
2-வது ரிஷபம் பெருமையும் புண்ணிய விருத்தியுமுண்டு.
3-வது மிதுனம் தனதான்யமுண்டாயினும் மத்திம பலனும் [நடக்கும்.
4-வது கடகம் சுபம், ஜெயம், பூர்ணஆயுள் உண்டாகும்.
5-வது சிம்மம் வசிகரம், செல்வம் இவைகளுண்டாகும்.
6-வது கன்னி ஞானம், ஆயுள் விருத்தியுண்டாகும்.
7-வது துலாம் போகபாக்கியம், செல்வமுண்டாகும்.
8-வது விருச்சிகம் சகல நன்மையும், ஒன்றுக் கொன்று பொருந்தாமல் நடக்கும்.
9-வது தனுசு சுபகரம் செல்வம் சமமாய் நடக்கும்.

10-வது மகரம் நாளுக்கு நாள் பொருளும், சௌக்கியமும், புத்திரவிருத்தியு முண்டாக்கும்.

11-வது கும்பம் செல்வம், துன்பம், இரண்டும் சமமாய் நடக்கும்.

12-வது மீனம் ஜெயமுண்டு தாமதமாய் நடக்கும்.

## 10 யோகப்பலன்.

ஆயத்தை 4ல் பெருக்கி 27ல் வகுக்க வருமிச்சம் யோகம்.

1-வது விஷ்கம்பம். அசுபம் தீதாம்.

2-வது பிரீதி, 3-வது ஆயுஷ்மான், 4-வது சௌபாக்கியம், 5-வது சோபனம் — இந்நான்கும் தன லாப சுப யோகங்கள் உத்தமம்.

6-வது அதிகண்டம். அசுபம் தீதாம்.

7-வது சுகர்மம், 8-வது திருதி — இந்த இரண்டும் சுபயோகங்கள் உத்தமம்.

9-வது சூலம், 10-வது கண்டம் — இந்த இரண்டும் அசுபயோகங்கள் மத்திமம்.

11-வது விருத்தி, 12-வது துருவம் — இந்த இரண்டும் சுபயோகங்கள் உத்தமம்.

13-வது வியகாதம். அசுபம் தீதாம்.

14-வது அரிஷணம். தனலாபம்.

15-வது வஜ்ஜிரம். அசுபம் தீதாம்.

16-வது சித்தி. தனலாபம் உத்தமம்.

17-வது விதிபாதம். தீதாம்.

18-வது வரியான். உத்தமம்.

19-வது பரிகம் தீது மத்திமம்.

| | |
|---|---|
| 20-வது சிவம்<br>21-வது சித்தம்<br>22-வது சாத்தியம்<br>23-வது சுபம்<br>24-வது சுப்பிரமம்<br>25-வது பிரமம்<br>26-வது ஐந்திரம் | இவையெழும் சுபயோகங்கள் தனலாப போக பாக்கியங்கள் உண்டாகும் |

27-வது வைதிருதி அசுபம் தீது

## 11 கரணப் பலன்.

ஆயத்தை 5ல் பெருக்கி 11ல் வகுக்க வருமிச்சம் கரணம்.

| | |
|---|---|
| 1-வது பாவம்<br>2-வது பாலவம்<br>3-வது கௌலவம்<br>4-வது தைதுலை<br>5-வது கரசை<br>6-வது வணசை | இவை ஆறும் நன்மை உண்டாகும் உத்தமம். |
| 7-வது பத்திரை<br>8-வது சகுனி<br>9-வது சதுஷ்பாதம்<br>10-வது நாகவம்<br>11-வது கிமஸ்துக்கினம் | இவை ஐந்தும் தீது அதமம். |

## 12 அம்ஸப் பலன்.

ஆயத்தை 4ல் பெருக்கி 9ல் வகுக்க வருமிச்சம் அம்ஸம்.

1-வது தஸ்கரா அம்ஸம் மகிமை உண்டாகும்.
2-வது புத்தியம்ஸம் நன்மை உண்டாகும்.
3-வது சத்தி அம்ஸம் செல்வமுண்டாகும்.
4-வது புஷ்கராம்ஸம் தான்யவிருத்தியுண்டாகும்.
5-வது இராஜாம்ஸம் க்ஷேமமுண்டாகும்.

6-வது யோகராம்ஸம் யோகமுண்டாகும்.

7-வது சனியாம்ஸம் நோய்உண்டாகும்.

8-வது தரித்திராம்ஸம் நாசம்உண்டாகும்.

9-வது சுகராம்ஸம் தனவிருத்தி உண்டாகும்.

## 13 வம்ஸப் பலன்.

ஆயத்தை 9ல் பெருக்கி 4ல் வகுக்க வருமிச்சம் வம்ஸம்

1-வது பிராமணவம்ஸம் சுபகரமுண்டாகும் நான்கு வருணத்தாருக்கும் உத்தமம்.

2-வது க்ஷத்திரிய வம்ஸம். ஜெயம் வெற்றியுண்டாகும்.

3-வது வைசிய வம்ஸம். தனம் செல்வ முதலியவையுண்டாகும்

4-வது சூத்திரவம்ஸம். மத்திமபலனுண்டாகும்

## 14 வயதின் பலன்.

ஆயத்தை 27ல் பெருக்கி 100-ஆல் வகுக்க வருமிச்சம் வயதாம். வயது 1 முதல் 27 வரையில் சுபமில்லை. அதம பலன் என்றும்,

28 முதல் 50 வரையில் மத்திம பலன் என்றும்

51 முதல் 100 வரையில் உத்தமபலன் என்றும் சிற்பநூல் கூறுவது ஆதலால் எல்லாப்பொருத்தங்களும் நன்ருய் இருந்தால் 27க்கு மேல் உத்தமம் என்று நூல்கள் கூறுகிறது.

நகரம் கோவில் இவைகளுக்கு வயது 1க்கு 10 ஆகவும் கல் வீடு தடாகம் கூபம் இவைகளுக்கு வயது 1க்கு 3 ஆகவும் கூரை வீடு முதலியவைக்கு வயது 1க்கு 1ஆகவும் கொள்க.

## 15 பூதப் பலன்.

ஆயத்தை 3ல் பெருக்கி 5ல் வகுக்க வருமிச்சம் பூதம்.

1-வது பிரிதிவிபூதம். செல்வம் உண்டாகும்.

2-வது அப்புபூதம். சந்தோஷம் உண்டாகும்.

3-வது தேயுபூதம். மரணம் உண்டாகும்.
4-வது வாயுபூதம். ஆதாயமுண்டாகும்.
5-வது ஆகாயபூதம். செலவு உண்டாகும்.

## 16 நேத்திரப் பலன்

ஆதிவாரம் முதல் மனையின் வாரம் வரையில் எண்ணிவந்த தொகையை 3ல்பெருக்கி அந்த தொகையை அசுவனி முதல் எண்ணித் தள்ளியபின் அப்பால் நட்சத்திரம் ஒன்பதும் ஒற்றைக்கண். மேல் நட்சத்திரம் 12ம் இரட்டைகண்கள் இவற்றிற்கு மேல் 6ம் குருடு எனப்படும். விபரம் அட்டவணையில் பார்க்க.

2 கண்மனையாயின் உத்தமம்.
1 கண்மனையாயின் மத்திமம்.

நேத்திரம் இல்லாமனை அதமமான மனை அது கூடாது.

## 17 ஆயுஸ்திரப் பலன்.

ஆயத்தை 7ல் பெருக்கி 5ல் வகுக்க வருமிச்சம் ஆயுஸ்திரம்.

1-வது பாலகுஸ்திரம். உத்தமம்.
2-வது யெளவனகுஸ்திரம். சுபகரம்.
3-வது கௌமாரகுஸ்திரம். நன்மை.
4-வது விருத்தகுஸ்திரம். பீடை.
5-வது மரணகுஸ்திரம். மரணம்.

## 18 கணப் பலன்.

மனையின் நட்சத்திரம் எந்தக்கணமோ அதுவே மனையின் கணமுமாகும்.

மனையின் நட்சத்திரம்.

| | | |
|---|---|---|
| அசுவனி | ஆயின் | தேவகணம் |
| பரணி | ஆயின் | மனிதகணம் |
| கிருத்திகை | ஆயின் | ராக்ஷஸகணம் |
| ரோகணி | ஆயின் | மனிதகணம் |
| மிருகசிரிஷம் | ஆயின் | தேவகணம் |

| | | |
|---|---|---|
| திருவாதிரை | ஆயின் | மனிதகணம் |
| புனர்பூசம் | ஆயின் | தேவகணம் |
| பூசம் | ஆயின் | தேவகணம் |
| ஆயிலியம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| மகம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| பூரம் | ஆயின் | மனிதகணம் |
| உத்திரம் | ஆயின் | மனிதகணம் |
| அஸ்தம் | ஆயின் | தேவகணம் |
| சித்திரை | ஆயின் | ராக்ஷஸகணம் |
| சுவாதி | ஆயின் | தேவகணம் |
| விசாகம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| அனுஷம் | ஆயின் | தேவகணம் |
| கேட்டை | ஆயின் | ராக்ஷஸகணம் |
| மூலம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| பூராடம் | ஆயின் | மனிதகணம் |
| உத்திராடம் | ஆயின் | மனிதகணம் |
| திருவோணம் | ஆயின் | தேவகணம் |
| அவிட்டம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| சதயம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| பூரட்டாதி | ஆயின் | மனிதகணம் |
| உத்திரட்டாதி | ஆயின் | மனிதகணம் |
| ரேவதி | ஆயின் | தேவகணம் |

தலைவன் (அல்லது) எஜமானன் கணமும் கிரகம் (அல்லது) மனையின் கணமும் ஒன்ருகில் நலம் உண்டாகும்.

தேவகணமும் மனித கணமும் வந்தால் உத்தம பலனுகவே நடக்கும்.

ராக்ஷஸ கணமும் மனிதகணமும் வந்தால் மகிமை யுண்டாகும்.

ராக்ஷஸ கணமும் தேவகணமும் வந்தால் பகையும் சத்துருக்களால் எக்காலத்திலும் கஷ்டமும் ஏற்படும்.

## 19 அமிர்தாதியோகப் பலன்.

மனைக்கு வார நட்சத்திர சம்பந்தத்தா லுண்டாகும் அமிர்தாதியோகங்கள்

| நட்சத்திரம். | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| அசுவனி | ௧ | ௧ | ௧ | ௰ | ௮ | ௮ | ௧ |
| பரணி | ௭ | ௧ | ௧ | ௧ | ௧ | ௧ | ௧ |
| கிருத்திகை | ௧ | ௰ | ௧ | ௮ | ௰ | ௧ | ௮ |
| ரோகணி | ௧ | ௮ | ௮ | ௧ | ௨ | ௰ | ௮ |
| மிருகசீரிஷம் | ௧ | ௮ | ௧ | ௧ | ௰ | ௧ | ௧ |
| திருவாதிரை | ௧ | ௧ | ௰ | ௧ | ௰ | ௧ | ௧ |
| புனர்பூசம் | ௧ | ௮ | ௧ | ௧ | ௮ | ௧ | ௧ |
| பூசம் | ௧ | ௧ | ௧ | ௧ | ௮ | ௨ | ௧ |
| ஆயிலியம் | ௧ | ௧ | ௧ | ௧ | ௧ | ௰ | ௰ |
| மகம் | ௰ | ௰ | ௧ | ௧ | ௮ | ௰ | ௮ |
| பூரம் | ௧ | ௧ | ௧ | ௮ | ௧ | ௧ | ௧ |
| உத்திரம் | ௮ | ௧ | ௮ | ௮ | ௰ | ௧ | ௨ |
| அஸ்தம் | ௮ | ௧ | ௧ | ௰ | ௧ | ௮ | ௰ |
| சித்திரை | ௧ | ௭ | ௧ | ௧ | ௧ | ௧ | ௰ |
| சுவாதி | ௧ | ௮ | ௧ | ௧ | ௮ | ௧ | ௮ |
| விசாகம் | ௨ | ௰ | ௰ | ௧ | ௧ | ௧ | ௧ |
| அனுஷம் | ௰ | ௧ | ௧ | ௮ | ௧ | ௧ | ௧ |
| கேட்டை | ௰ | ௧ | ௨ | ௧ | ௭ | ௰ | ௧ |
| மூலம் | ௮ | ௧ | ௮ | ௰ | ௧ | ௮ | ௧ |
| பூராடம் | ௧ | ௨ | ௧ | ௮ | ௧ | ௭ | ௧ |
| உத்திராடம் | ௮ | ௰ | ௭ | ௮ | ௧ | ௧ | ௧ |
| திருவோணம் | ௮ | ௮ | ௧ | ௧ | ௧ | ௰ | ௧ |
| அவிட்டம் | ௰ | ௧ | ௧ | ௭ | ௧ | ௧ | ௧ |
| சதயம் | ௧ | ௧ | ௰ | ௧ | ௰ | ௧ | ௮ |
| பூரட்டாதி | ௧ | ௧ | ௰ | ௧ | ௰ | ௧ | ௮ |
| உத்திரட்டாதி | ௮ | ௧ | ௮ | ௧ | ௧ | ௧ | ௧ |
| ரேவதி | ௮ | ௧ | ௧ | ௨ | ௧ | ௮ | ௭ |

அ. அமிர்தயோகம். சி. சித்தியோாம்.

உ. உத்பாதயோகம். பி. பிரபலாரிஷ்டையோகம்.

ம. மரணயோகம்.

| | |
|---|---|
| அமிர்தயோகம்.<br>சித்தியோகம். | இவ்விரண்டும்உத்தமமானயோகங்கள் சுபகரமுண்டு- |
| உத்பாதயோகம்.<br>பிரபலாரிஷ்டையோகம். | இவ்விரண்டும் மத்திமமான யோகங்கள். |

மரணயோகம். இது அதமமானயோகம்,

## 20 பஞ்சகப் பலன்.

மணைக்கு வந்த வாரம் திதி நட்சத்திரம் இராசி இவற்றின் தொகைகளைக் கூட்டி 9ல் வகுக்க வருமிச்சம் பஞ்சகம்.

1-வது மாண பஞ்சகம். ஆகாது அதமம்.

2-வது அக்கினிபஞ்சகம். ஆகாது அதமம்.

3-வது ரிஷ்பஞ்சகம். உத்தமம் சுபம்.

4-வது இராஜ பஞ்சகம். ஆகாது அதமம்.

5-வது ரிஷ்பஞ்சம். உத்தமம் சுபம்.

6-வது சோரஞ்சகம். ஆகாது அதமம்.

7-வது ரிஷ்பஞ்சகம். உத்தமம் சுபம்.

8-வது ரோகபஞ்சகம். ஆகாது அதமம்.

9-வது ரிஷ்பபஞ்சகம் உத்தமம் சுபம்.

சகலபொருத்தங்கள் இருந்து பஞ்சகபொருத்தங்கள் இல்லாவிட்டால் ஷை கெட்ட பஞ்சகங்களுக்கு மனைமுகூர்த்தம் செய்யும் காலங்களில், அடியில் கண்ட பிரீதி செய்யவும்.

1-வது மாணபஞ்சகம் ரத்தினதானம்.

2-வது அக்னிபஞ்சம் சந்தனக்குழம்புதானம்.

4-வது இராஜபஞ்சம் எலிமிச்சம்பழம்தானம்.

6-வது சோரபஞ்சம் தீபதானம்.

8-வது ரோகபஞ்சகம் தான்னியதானம்.

## 21 அஷ்டலக்ஷ்மி பலன்.

ஆயத்தை 3ல் பெருக்கி 8ல் வகுக்க வருமிச்சம் லக்ஷ்மி

1-வது இராஜலக்ஷ்மி இராஜயோகபலன்.

2-வது கீர்த்திலக்ஷ்மி கீர்த்திஉண்டாகும்.

3-வது தனலக்ஷ்மி தனவரும்படி உண்டாகும்.

4-வது தான்யலக்ஷ்மி தான்யவிருத்தியுண்டாகும்.

5-வது தைரியலக்ஷ்மி தைரியமுண்டாகும்,

6-வது வீரியலக்ஷ்மி சுபம்உண்டாகும்.

7-வது ஜெயலக்ஷ்மி ஜெயம்உண்டாகும்.

8-வது வாலக்ஷ்மி ஞானம் உண்டாகும்.

## 22 அஷ்டதிக்குபாலகப் பலன்.

ஆயத்தை 9ல் பெருக்கி 8ல் வகுக்க வருமிச்சம் அஷ்டதிக்கு பாலகர்கள்

1-வது இந்திரன் போகம்உண்டாகும்.

2-வது அக்கினி வாதைஉண்டாகும்.

3-வது எமன் மரணவஸ்தை.

4-வது நிருதி சுகம்உண்டாகும்.

5-வது வருணன் இன்பமுண்டாகும்.

6-வது வாயு தனமுண்டாகும்.

7-வது குபேரன் செல்வமுண்டாகும்.

8-வது ஈசானியன் சந்தோஷமுண்டாகும்.

## 23 அதிதேவதைப் பலன்.

மனைக்கு வந்த வயதை 5ல் பெருக்கி 8ல் வகுக்க வரும் மிச்சம் அதிதேவதை

1-வது இந்திரன் யோகசித்தியுண்டாகும்.

2-வது அக்கினி அவஸ்த்தையுண்டாகும்.

3-வது எமன் உயிர்ச்சேதமுண்டாகும்.

4-வது நிருதி சுகம் உண்டாகும்.

5-வது வருணன் இன்பசுக முண்டாகும்.

6-வது வாயு தனசம்பத்துண்டாகும்.

7-வது குபேரன் குபேரசம்பத்துண்டாகும்.

8-வது ஈசானியன் சுபசௌக்கியங்களுண்டாகும்.

## 24 தாரா பலன்.

எஜமானன் ஜென்மநட்சத்திரம் முதல் மனைக்கு வந்த நட்சத்திரம் வரையில் எண்ணியதொகையை 9ல் வகுக்க வரு மிச்சம் தாராபலன்

தாராபலன் 1க்கு ஜென்மம், கிலேசமுண்டாகும்.

,, 2க்கு சம்பந்து, சம்பத்துண்டாகும்.

,, 3க்கு விபத்து, விபத்துண்டாகும்.

,, 4க்கு க்ஷேமம், க்ஷேமம் உண்டாகும்.

,, 5க்கு பிரத்தியருக்கு, பிரத்திபருக்குக்காரிய நஷ்டமுண்டாகும்.

,, 6க்கு சிநேகம், சிநேகவாஞ்சையுண்டாகும்.

,, 7க்கு வதை, வதையுண்டாகும்.

,, 8க்கு மைத்திரம், சுபமுண்டாகும்.

,, 9க்கு பரமமைத்திரம், சுபசந்தோஷமுண்டு

## 25 சந்திரா பலன்.

எஜமானன் ஜென்ம இராசிமுதல் மனைக்குவந்த இராசி வரையில் எண்ணிவந்த தொகை சந்திரபலன்

சந்திரபலன் 1க்கு திரேக சௌக்கியம்.

" 2க்கு தன ஆனி சுக்கில பக்ஷமாகில் உத்தமம் என்பாருமுளர்

" 3க்கு திரவியலாபம்.

" 4க்கு ரோகபயம். கிருஷ்ணபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 5க்கு காரியவிசல்பம். சுக்கிலபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்.

" 6க்கு சத்ருநாசம்.

" 7க்கு சௌக்கிய விருத்தியுண்டாகும்.

" 8க்கு ரோகவிருத்தி. கிருஷ்ணபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 9க்கு காரியதாமதம். சுக்கிலபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 10க்கு உத்தியோக விருத்தியுண்டாகும்.

" 11க்கு இஷ்டஜன சித்தியாகும்.

" 12க்கு தனவிரயம். கிருஷ்ணபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்.

முக்கியக் குறிப்பு:—

மேல் காட்டவந்த ஆதாய விரயாதிகளில் பெருக்கி வகுத்ததில் மிச்சம் வராவிட்டால், வகுத்த எண்ணையே மிச்சமாகக் கொள்ள வேண்டும்.

# நாம நட்சத்திரங்கள்

| நட்சத்திரங்கள். | 1பாதம். | 2பாதம். | 3பாதம். | 4பாதம். |
|---|---|---|---|---|
| அசுவனி | சு | சே | சோ | லா |
| பரணி | லி | லூ | லெ | லோ |
| கிருத்திகை | அ | இ | உ | எ |
| ரோகணி | ஒ | வ | வி | வு |
| மிருகசீரிஷம் | வே | வோ | க | கி |
| திருவாதிரை | கு | க | ங | ச |
| புனர்பூசம் | கே | கோ | ஹ | ஹி |
| பூசம் | ஹீ | ஹே | ஹோ | டா |
| ஆயிலியம் | டி | டு | டே | டோ |
| மகம் | ம | மி | மு | மெ |
| பூரம் | மோ | ட | டி | டு |
| உத்திரம் | டே | டோ | ப | பி |
| அஸ்தம் | பூ | ஷ | ண | ட |
| சித்திரை | பெ | பொ | ர | ரி |
| சுவாதி | ரு | ரே | ரோ | த |
| விசாகம் | தி | து | தே | தோ |
| அனுஷம் | ந | நி | நு | நே |
| கேட்டை | நோ | ய | யி | யு |
| மூலம் | யே | யோ | ப | பி |
| பூராடம் | பூ | த | ப | ட |
| உத்திராடம் | பே | போ | ஜ | ஜி |
| திருவோணம் | ஜீ | ஜே | ஜோ | கா |
| அவிட்டம் | க | கி | கு | கெ |
| சதயம் | கோ | ஸ | ஸி | ஸு |
| பூரட்டாதி | ஸ | ஸோ | த | தீ |
| உத்திரட்டாதி | து | ஸ்ரீ | ச | ய |
| ரேவதி | தே | தோ | ச | சி |

| குழி அல்லது சுற்றளவு | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 13 | 15 | 17 | 19 | 21 | 23 | 25 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கெற்பம் | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| ஆதாயம் | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 |
| விரயம் | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 |
| யோனி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| வாரம் | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 |
| திதி | 4 | 12 | 20 | 25 | 6 | 14 | 22 | 30 | 8 | 16 | 24 | 2 | 10 |
| நட்சத்திரம் | 8 | 24 | 13 | 2 | 18 | 7 | 23 | 12 | 1 | 17 | 6 | 22 | 11 |
| இராசி-4 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 |
| இராசி-7 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 |
| யோகம் | 4 | 12 | 20 | 1 | 9 | 17 | 25 | 6 | 14 | 22 | 3 | 11 | 19 |
| கரணம் | 5 | 4 | 3 | 2 | 1 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 |
| அம்சம் | 4 | 3 | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |
| வம்ஸம் | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| வயது | 27 | 81 | 35 | 89 | 43 | 97 | 51 | 5 | 59 | 13 | 67 | 21 | 75 |
| பூதம் | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 |
| நேத்திரம் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 2 | 1 | 2 | 2 | 1 |
| சூன்திரம் | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 |
| கணம் | தே | இ | தே | ம | இ | தே | இ | ம | தே | தே | ம | தே | ம |
| அ.யோகங்கள் | கி | கி | கி | கி | கி | கி | கி | அ | கி | கி | கி | கி | கி |
| பஞ்சகம் | 9 | 9 | 8 | 5 | 4 | 3 | 9 | 2 | 5 | 4 | 4 | 9 | 8 |
| லக்ஷ்மி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| அஷ்டதிக்கு | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| அதிதேவதை | 7 | 5 | 7 | 5 | 7 | 5 | 7 | 1 | 7 | 1 | 7 | 1 | 7 |

| குழி சுற் | 27 | 29 | 31 | 33 | 35 | 37 | 39 | 41 | 43 | 45 | 47 | 49 | 51 | 53 | 55 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கெற் | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 |
| ஆதா | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 |
| விரை | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 |
| யோ | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 |
| வார | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 |
| திதி | 18 | 26 | 4 | 12 | 20 | 25 | 6 | 14 | 22 | 30 | 8 | 16 | 24 | 2 | 10 |
| நட் | 27 | 16 | 5 | 21 | 10 | 26 | 15 | 4 | 20 | 9 | 25 | 14 | 3 | 19 | 8 |
| இரா | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 |
| இரா | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 |
| யோ | 27 | 8 | 16 | 24 | 5 | 13 | 21 | 2 | 10 | 18 | 26 | 7 | 15 | 23 | 4 |
| கர | 3 | 2 | 1 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 11 |
| அம் | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 |
| வம் | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 |
| வய | 29 | 83 | 37 | 91 | 45 | 99 | 53 | 7 | 61 | 15 | 69 | 23 | 77 | 31 | 85 |
| பூத | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 |
| நேத் | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 |
| ருத் | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 |
| கணை | தே | ம | இ | ம | தே | ம | ம | இ | ம | இ | இ | இ | தே | இ | தே |
| அ-யோ | சி | ம | சி | மி | அ | சி | சி | உ | உ | ம | ம | ம | அ | அ | அ |
| பஞ் | 8 | 7 | 1 | 3 | 9 | 8 | 7 | 4 | 3 | 3 | 8 | 5 | 7 | 3 | 9 |
| லக்ஷ | 1 | 7 | 5 | 2 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 |
| அஷ் | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 |
| அதி | 1 | 7 | 1 | 7 | 1 | 7 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |

| குழி அல்லது மசுற்றள | 57 | 59 | 61 | 63 | 65 | 67 | 69 | 71 | 73 | 75 | 77 | 79 | 81 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கெற்பம் | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| ஆதாயம் | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 |
| விரையம் | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 |
| யோனி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| வாரம் | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 |
| திதி | 18 | 26 | 4 | 12 | 20 | 28 | 6 | 14 | 22 | 30 | 8 | 16 | 24 |
| நட்சத்திரம் | 24 | 13 | 2 | 18 | 7 | 23 | 12 | 1 | 17 | 6 | 22 | 11 | 27 |
| இராசி-4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 |
| இராசி-7 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 |
| யோகம் | 12 | 20 | 1 | 9 | 17 | 25 | 6 | 14 | 22 | 3 | 11 | 19 | 27 |
| கரணம் | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 11 | 10 | 9 |
| அம்சம் | 3 | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 |
| வம்சம் | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 8 | 1 |
| வயது | 39 | 93 | 47 | 1 | 55 | 9 | 63 | 17 | 71 | 25 | 79 | 33 | 87 |
| பூதம் | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 |
| நேத்திரம் | 2 | 0 | 2 | 0 | 0 | 2 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 |
| ஆஸ்திரம் | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 |
| கணம் | இ | தே | ம | இ | தே | இ | ம | தே | தே | ம | தே | ம | தே |
| அ-யோகம் | சி | அ | சி | சி | சி | ம | ம | சி | சி | ம | சி | அ | அ |
| பஞ்சகம் | 2 | 8 | 4 | 4 | 3 | 2 | 8 | 7 | 4 | 6 | 9 | 8 | 1 |
| லக்ஷ்மி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| அஷ்டதிக்கு | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| அதிதேவதை | 3 | 1 | 3 | 5 | 3 | 5 | 3 | 5 | 3 | 5 | 3 | 5 | 3 |

| குழி சுற் | 83 | 85 | 87 | 89 | 91 | 93 | 95 | 97 | 99 | 101 | 103 | 105 | 107 | 109 | 111 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செற் | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 |
| ஆதா | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 |
| விரை | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 |
| யோ | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 |
| வார | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 |
| திதி | 2 | 10 | 18 | 26 | 4 | 12 | 20 | 28 | 6 | 14 | 22 | 30 | 8 | 16 | 24 |
| நட் | 16 | 5 | 21 | 10 | 26 | 15 | 4 | 20 | 9 | 25 | 14 | 3 | 19 | 8 | 24 |
| இரா | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 |
| இரா | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 |
| யோ | 8 | 16 | 24 | 5 | 13 | 21 | 2 | 10 | 18 | 26 | 7 | 15 | 23 | 4 | 12 |
| கர | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 |
| அம் | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 |
| வம் | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 |
| வயது | 41 | 95 | 49 | 3 | 57 | 11 | 65 | 19 | 73 | 27 | 81 | 35 | 89 | 43 | 97 |
| பூதம் | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 |
| நேத் | 1 | 0 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| குத் | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 |
| கண | சி | தே | ம | இ | ம | தே | ம | ம | இ | ம | இ | இ | இ | தே | இ |
| அ-யோ | சி | அ | சி | சி | சி | சி | சி | சி | சி | சி | சி | அ | வ | சி | ம |
| பஞ் | 4 | 3 | 3 | 2 | 5 | 7 | 6 | 3 | 2 | 8 | 7 | 7 | 3 | 2 | 2 |
| லக்ஷ | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 |
| அஷ் | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 |
| அதி | 5 | 3 | 5 | 7 | 5 | 7 | 5 | 7 | 5 | 7 | 5 | 7 | 5 | 7 | 5 |

| குழி அல்லது சுற்றளவு | 113 | 115 | 117 | 119 | 121 | 123 | 125 | 127 | 129 | 131 | 133 | 135 | 137 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கெற்பம் | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| ஆதாயம் | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 |
| விரையம் | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 |
| யோனி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| வாரம் | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 |
| திதி | 2 | 10 | 18 | 26 | 4 | 12 | 20 | 28 | 6 | 14 | 22 | 30 | 8 |
| நட்சத்திரம் | 13 | 2 | 18 | 7 | 23 | 12 | 1 | 17 | 6 | 22 | 11 | 27 | 16 |
| இராசி-4 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 |
| இராசி-7 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 |
| யோகம் | 20 | 1 | 9 | 17 | 25 | 6 | 14 | 22 | 3 | 11 | 19 | 27 | 8 |
| கரணம் | 4 | 3 | 2 | 1 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 |
| அம்சம் | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 | 8 |
| லம்பம் | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| வயது | 51 | 5 | 59 | 13 | 67 | 21 | 75 | 29 | 83 | 37 | 91 | 45 | 99 |
| பூதம் | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 |
| நேத்திரம் | 1 | 2 | 1 | 2 | 2 | 1 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 |
| ஆஸ்திரம் | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 |
| கணம் | தே | ம | இ | தே | இ | ம | தே | தே | ம | தே | ம | இ | தே |
| அ-யோகம் | சி | சி | உத் | சி | மி | அ | அ | சி | சி | சி | சி | உத் | உத் |
| பஞ்சகம் | 7 | 4 | 6 | 3 | 8 | 1 | 7 | 6 | 3 | 2 | 8 | -1 | 6 |
| லக்ஷ்மி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| அஷ்டதிக்கு | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| அதிதேவதை | 7 | 1 | 7 | 1 | 7 | 1 | 7 | 1 | 7 | 1 | 7 | 1 | 7 |

| குழி சுற். | 139 | 141 | 143 | 145 | 147 | 149 | 151 | 153 | 155 | 157 | 159 | 161 | 163 | 165 | 167 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கேற் | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 |
| ஆதா | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 |
| விரை | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 |
| யோ | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 |
| வார | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 |
| திதி | 16 | 24 | 2 | 10 | 18 | 26 | 4 | 12 | 20 | 28 | 6 | 14 | 22 | 30 | 8 |
| நட் | 5 | 21 | 10 | 26 | 15 | 4 | 20 | 9 | 25 | 14 | 3 | 19 | 8 | 24 | 13 |
| இரா | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 |
| இரா | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 |
| யோ | 16 | 24 | 5 | 13 | 21 | 2 | 10 | 18 | 26 | 7 | 15 | 23 | 4 | 12 | 20 |
| கர | 2 | 1 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 11 | 10 |
| அம் | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 |
| வம் | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 |
| வயது | 53 | 7 | 61 | 15 | 69 | 23 | 77 | 31 | 85 | 39 | 93 | 47 | 1 | 55 | 9 |
| பூத | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 |
| நேத் | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 0 | 2 | 0 | 0 | 2 | 0 |
| சூத் | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 |
| கண | தே | ம | இ | ம | தே | ம | ம | இ | ம | இ | இ | இ | தே | இ | தே |
| அ-யோ | ம | ம | மூ | அ | அ | சி | சி | சி | ம | சி | சி | சி | சி | சி | சி |
| பஞ் | 3 | 5 | 8 | 7 | 7 | 6 | 2 | 2 | 1 | 7 | 6 | 3 | 2 | 4 | 7 |
| லக்ஷ | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 |
| அஷ் | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 |
| அதி | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 5 | 3 | 5 |

4

| குழி அல்லது சுற்றளவு | 169 | 171 | 173 | 175 | 177 | 179 | 181 | 183 | 185 | 187 | 189 | 191 | 193 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செற்பம் | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| ஆதாயம் | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 | 12 | 4 | 8 |
| விரையம் | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 | 5 | 3 | 1 | 9 | 7 |
| யோனி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| வாரம் | 2 | 6 | 3 | 7 | 4 | 1 | 5 | 2 | 6 | 3 | 7 | 4 | 1 |
| திதி | 16 | 24 | 2 | 10 | 18 | 26 | 4 | 12 | 20 | 28 | 6 | 14 | 22 |
| நட்சத்திரம் | 2 | 18 | 7 | 23 | 12 | 1 | 17 | 6 | 22 | 11 | 27 | 16 | 5 |
| இராசி-4 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 | 12 | 8 | 4 |
| இராசி-7 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 | 9 | 11 | 1 | 3 | 5 | 7 |
| யோகம் | 1 | 9 | 17 | 25 | 6 | 14 | 22 | 3 | 11 | 19 | 27 | 8 | 16 |
| காணம் | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 11 | 10 | 9 | 8 |
| அம்சம் | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 | 8 | 7 |
| வம்ஸம் | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| வயது | 63 | 17 | 71 | 25 | 79 | 33 | 87 | 41 | 95 | 49 | 3 | 57 | 11 |
| பூதம் | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 | 5 | 1 | 2 | 3 | 4 |
| நேத்திரம் | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 1 | 1 | 1 | 1 | 1 |
| சூஸ்திரம் | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 | 5 | 4 | 3 | 2 | 1 |
| கணம் | ம | இ | தே | இ | ம | தே | தே | ம | தே | ம | தே | இ | தே |
| அ-யோகம் | சு | ம | சு | சு | அ | சு | சு | சு | ம | சு | ஞ | சு | சு |
| பஞ்சகம் | 6 | 6 | 2 | 8 | 1 | 9 | 3 | 5 | 2 | 1 | 7 | 6 | 5 |
| லக்ஷ்மி | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 | 1 | 7 | 5 | 3 |
| அஷ்டதிக்கு | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 | 3 | 5 | 7 | 1 |
| அதிதேவதை | 3 | 5 | 3 | 5 | 3 | 5 | 3 | 5 | 3 | 5 | 7 | 5 | 7 |

